# பகவத் பாதை




Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

20-06-2013


## நித்ய - அநித்ய வஸ்து விவேகம்

**- ஸ்ரீ பகவத்**



நித்தியம், பிரம்மம், ஆன்மா, சத், மெய்ப் பொருள் என்ற பெயரில் நாம் எதைத் தேடி அடைந்தாலும் அது அநித்தியமே.

நாம் அறியக் கூடியவை, உணரக் கூடியவை அனைத்தும் அநித்தியமே.

- ஸ்ரீ பகவத்



சில மாதங்களுக்கு முன்னால் சாது ஒருவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசினார். அவர் வேதாந்த சித்தாந்த சாஸ்திரங்களில் கரை கண்டவர்.

"உங்களது நூல் ஒன்றை சமீபத்தில் படித்தேன். நீங்கள் சாஸ்திரங்களுக்கு விரோதமாகப் பேசுவதைப் போன்ற ஒரு தொனி அந்த நூலில் தென்பட்டது...

"உங்களுடைய கருத்துகளும், புத்தருடைய கருத்துகளை ஒட்டிய தன்மையில் இருக்கிறது. புத்தர் கடவுளைப் பற்றி எதுவும் கூறுவதில்லை. ஆகவே 'அவர் சாஸ்திரங்களுக்கு விரோதமாகப் பேசுகிறார்' என்று அவரைப் பலரும் கூறுவதுண்டு. உண்மையில் சாஸ்திரப்படிதான் அவரும் பேசி இருக்கிறார். நீங்களும் சாஸ்திரத்துக்கு விரோதமாகப் பேசவில்லை.....

“இதுபற்றி சாஸ்திரம் என்ன சொல்லுகிறது தெரியுமா? கடவுளைப்பற்றி சாஸ்திரம் என்ன சொல்லுகிறது தெரியுமா? மனம், வாக்கு, காயம் ஆகியவற்றைக் கடந்து நிற்கும் ஒன்றைப் பற்றி பிரஸ்தாபிக்கவே கூடாது!” என்று தான் சாஸ்திரமும் கூறுகிறது.

- என்று கூறி சமஸ்கிருத வாக்கியம் ஒன்றையும் கூறினார்.

சாஸ்திரங்களைப் படித்தவர்கள் பெரும்பாலும் கூறுவது : "நித்ய அநித்ய வஸ்து விவேகம் வேண்டும்".

'நித்தியமானது எது, அநித்தியமானது எது என்பதைத் தெரிந்து கொண்டால் போதும். உலகம் அநித்தியமானது, உடல் அநித்தியமானது, புலன்கள் அநித்தியமானது என்பதைப் புரிந்து கொண்டால் அவற்றின் மீது நமக்கு மோகம் ஏற்படாது. மோகம் ஏற்படாவிட்டால் பந்தமும், பந்தத்தால் ஏற்படும் துயரமும் ஏற்படாது' - இப்படி அவர்கள் அதனை விவரிக்கிறார்கள்.

அவர்கள் அப்படிக் கூறும்போதே, அவர்கள் நித்ய - அநித்ய வஸ்து விவேகத்தை அடைந்து விட்டவர்களைப் போலவே பேசுகிறார்கள்.

ஆனால் அவர்கள் கூறும் பந்தமும் துயரமும் அவர்களை விட்டுப் போகவில்லை.

அப்படியானால் அவர்கள் நித்ய - அநித்ய வஸ்து விவேகத்தை அடையவில்லையா?

நித்ய வஸ்து என்பது என்ன? அநித்ய வஸ்து என்பது என்ன?

பிரம்மம் - ஆன்மா இவைதான் நித்ய வஸ்து. அதாவது பிரம்மம் வேறு, ஆன்மா வேறு அல்ல. பிரம்மம் அல்லது ஆன்மா மட்டுமே மெய்ப்பொருள். - நித்யமானது. மற்றவை அனைத்தும் அநித்யமானவை.

அன்பர் ஒருவர், ஒரு பிரபலமான உபன்யாசகருடைய ஒலிப்பேழை (Cassette) ஒன்றைக் கொடுத்திருந்தார். அதிலுள்ள சிலவற்றைக் கேட்க நேர்ந்தது.

“பிரம்மம் இருக்கிறது, ஆன்மா இருக்கிறது என்பதை எந்தப் பொறி புலன்களாலும் அறிய முடியாது. அதைப் பார்க்கமுடியாது; கேட்க முடியாது; சுவைக்க முடியாது; தொட்டு உணரமுடியாது. அப்படி ஒன்று இருப்பதை எவராலும் அறிய முடியாது. அப்படி ஒன்று இருப்பதைக் காட்டுவதற்காகத் தான், வேதங்கள் உள்ளன. வேதங்கள் சொல்வதை நம்பி ஏற்றுக் கொண்டுதான் பிரம்மத்தை, ஆன்மாவை அறிந்து கொள்ளமுடியும். மற்றபடி நம்மால் நேரடியாக அறியமுடியாது”.

- இப்படி அவர் பிரம்மத்தைப் பற்றியும், ஆன்மாவைப் பற்றியும் விவரித்தார்.

பிறகு அவரே வேறுவிதமான அணுகுமுறைக்கு வந்துவிட்டார்.

"ஆன்மாவைத் தெரிந்து கொள்ள வேண்டும்; ஆன்ம சாட்சாத்காரம் அடையவேண்டும். ஆன்ம சாட்சாத்காரம் அடைவது எளிதிலும் எளிது. ஆன்மா என்பது சுய விளக்கமுடையது. விளக்கைக் கொண்டு பொருட்களை அறியலாம். ஆனால் விளக்கை அறிய இன்னுமொரு விளக்கு தேவையில்லை. விளக்கு சுய விளக்கமுடையது. இருள் ஏற்பட்டுவிட்டால் நம்மால் நம்மைச் சுற்றி இருக்கும் எந்தப் பொருட்களையோ, மற்ற ஜனங்களையோ அறிய முடியாது. ஆனால் இருள் இருந்தாலும் கூட நம்மை நாம் அறிந்துகொண்டுதான் இருக்கிறோம். 'நான் இருக்கிறேன்' என்ற இருப்பு நிலைதான் ஆன்ம சாட்சாத்காரம்". - இப்படி அவரே விளக்க ஆரம்பித்துவிட்டார்.

இப்படித்தான், சத் – சித் என்பது விளக்கப்படுகிறது.

உண்மை என்பது சத். அதுதான் இருப்பது. அதுதான் உள்ளது.

சத் என்பது ஜடம் அல்ல. அதுதான் உயிருக்கும் உயிராக இருக்கும் ஆதிமூலம். அதுதான் சுத்த பிரம்மம். அது தான் சத். சத்தினுடைய வெளிப்பட்ட அம்சந்தான் சித். சித் அம்சந்தான் அறியும் அம்சம்.

சத் என்பது ஆதாரமாக இருந்தாலும் அதனை எவரும் அறியமுடியாது. அது அறியப்படும் பொருள் அன்று.

நான் இருக்கிறேன் என்ற அறியும் தன்மையுடன் இருப்பது சித் அம்சமே; நமது மனதின் அம்சமே.

என்னை நான் அறிந்து கொண்டிருக்கிறேன் என்றால் என்னைத் தெரிந்து கொள்ள வேதங்கள் தேவை இல்லையே.

உண்மையில், ஆன்மா, பிரம்மம், சத் ஆகியவற்றை எவராலும் அறியமுடியாது. ஆகவேதான் அவற்றைத் தெரிந்துகொள்ள வேதங்கள் தேவைப்படுகின்றன.

'சத்'தே 'சத்'தை அறிந்து கொள்ள வேதங்கள் தேவைப்படவில்லை.

மன அம்சமாகிய நாம், 'சத்'தை அறிந்துகொள்ளத்தான் வேதங்கள் தேவைப்படுகின்றன.

பிரத்தியட்சமாகத்தான் நாம் எதையும் அறிகிறோம். நான் உங்களை அறிகிறேன்; நீங்கள் என்னை அறிகிறீர்கள். நமது புலன்களின் மூலம் இவ்வாறு அறிவதைத்தான் பிரத்தியட்சமாக அறிவதாகக் கூறுகிறோம்.

இப்படி பிரத்தியட்சமாக பிரம்மத்தையோ – ஆன்மாவையோ – 'சத்'தையோ அறியமுடியாது.

அது இருப்பதை வேதங்கள் கூறுகின்றன.

அது இருப்பதை அனுமானம் போன்றவற்றால்தான் புரிந்துகொள்ள முடியும் என்றும் கூறிவிடுகின்றன.

புகையை நாம் பார்க்கிறோம் என்றால், புகைக்கு ஆதாரமாக நெருப்பு உள்ளது என்பதை நம்மால் ஊகித்துக் கொள்ள முடியும். ஏனெனில் நெருப்பு இல்லாமல் புகை ஏற்பட சாத்தியமே இல்லை.

பிரத்தியட்சமாகத் தெரியும் புகையைக் கொண்டு, பிரத்தியட்சமாகத் தெரியாமல் மறைந்திருக்கும் நெருப்பைத் தெரிந்து கொள்வதைப் போன்ற

பிரத்தியட்சமாகத் தெரியும் சித் அம்சத்தை – மன அம்சத்தைக் கொண்டு, பிரத்யட்சமாகத் தெரியாத சத் அம்சத்தை – பிரம்மத்தை – ஆன்மாவை ஊகித்துக் கொள்கிறோம்.

நமது முழு உடலும் உணர்வோடுதான் இருக்கிறது. ஆனாலும் அது, தான் இருப்பதைக் காட்டிக்கொள்வதில்லை. காட்டிக் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை.

நாம் நமது உடலைத் தடவிக் கொடுக்கிறோம் என்றால், உணர்ச்சியாக வெளிப்படுகிறது. வெளிப்பட்ட உணர்ச்சியைக் கொண்டு அதற்குக் காரணமான உடல் உணர்வை அனுமானித்துக் கொள்கிறோம்.

ஆனால் தடவப்பட்டதால் ஏற்பட்ட உணர்ச்சி மட்டும் உடல் உணர்வன்று.

உடல் உணர்வின் ஒரு சிறிய வெளிப்பாடுதான் அது.

தடவப்படுதல் என்பது உடலுக்கு ஏற்படும் ஓர் உபாதையே. உபாதை உணர்ச்சிக்குக் காரணம் உடல் உணர்வாக இருந்தாலும் உடல் உணர்வு என்பது உபாதை மட்டுமன்று.

ஆனால் உபாதையைக் கொண்டு உடல் உணர்வையும் நாம் ஊகித்துக் கொள்கிறோம்.

வெளிப்பாடுகளை மட்டுமே அறியமுடியும் – உணரமுடியும். வெளிப்பாடுகளுக்குக் காரணமான மெய்ப்பொருளை அறியமுடியாது – உணரமுடியாது.

நித்திய – அநித்திய வஸ்து விவேகம் என்பது எதைக் குறிக்கிறது?

நித்தியத்தை பிரத்யட்சமாக அறிவதையும் அநித்தியத்தை பிரத்யட்சமாக அறிவதையும் – குறிக்கிறதா?

ஒருவர் காரினுள் அமர்ந்து காரை ஓட்டுகிறார். காரையும் பார்க்கிறோம்; காரினுள் அமர்ந்திருக்கும் காரோட்டியையும் பார்க்கிறோம்.

கார் என்பது ஜடப் பொருள்.

காரோட்டி என்பவர் உயிருள்ள நபர்.

இங்கே இரண்டு தன்மைகளையும் அறிந்து ஜடப்பொருளிலிருந்து உயிருள்ள நபரை வேறுபடுத்திப் புரிந்து கொள்கிறோம்.

இப்படி நித்தியப் பொருளையும், அநித்தியப் பொருளையும் தனித்தனியாக அறிந்து அவற்றின் வேறுபாடுகளைப் புரிந்து கொள்கிறோமா?

அநித்தியப் பொருட்களை அறிவதுபோல்

நித்தியத்தை அறிந்துள்ளோமா?

நித்தியம் என்பது அறியப்படும் பொருள் அல்ல.

நித்தியத்துக்கு தன்னை அறிந்து, அநித்தியத்திலிருந்து விடுபடவேண்டிய விவேகம் தேவைப்படவில்லை.

நமக்குதான் அந்த விவேகம் தேவைப்படுகிறது. நித்திய அநித்திய வஸ்து விவேகத்தை அடையவேண்டிய பொறுப்பு நமக்குதான் உள்ளது.

உங்களிடம் ஒருவர் கேள்வி கேட்க, நீங்கள் பதில் சொல்வதாக வைத்துக் கொள்வோம்.

"மாம்பழம் சாப்பிட்டிருக்கிறீர்களா?" – கேள்வி.

"சாப்பிட்டிருக்கிறேன்" – உங்களது பதில்.

"மாதுளம் பழம் சாப்பிட்டிருக்கிறீர்களா?"

"சாப்பிட்டுப் பார்த்ததில்லை" – உங்களது பதில்.

இப்போது உங்களுக்கு ஒரு வேலை கொடுக்கப்படுகிறது.

மாம்பழத்தின் ருசியையும், மாதுளம் பழத்தின் ருசியையும் ஒப்பிட்டு நீங்கள் ஒரு கட்டுரை எழுதவேண்டும்.

– இதுதான் உங்களுக்குக் கொடுக்கப்பட்ட வேலை.

நீங்கள் என்ன எழுதுவீர்கள்? எப்படி எழுதுவீர்கள்?

மாம்பழத்தின் ருசி உங்களுக்குத் தெரியும். அதை உங்களுக்குத் தெரிந்த வரையில் கட்டுரையாக எழுதமுடியும்.

மாதுளம் பழத்தைப் பற்றியோ அதன் சுவையைப் பற்றியோ நேரடியாக உங்களுக்கு எதுவுமே தெரியாது.

எவரோ அதுபற்றிக் கூறிய தகவல்தான் உங்களிடம் உள்ளது. அதை ஆதாரமாகக் கொண்டு, தீர்மானமாக எதையாவது உங்களால் கூறமுடியுமா?

இப்படித்தான் நித்யம் – சத் அம்சம் – பிரம்மம் – ஆன்மா, எவராலும் அறிய முடியாத நிலையில் உள்ளது.

அநித்தியத்தை–சத் அம்சத்தின் வெளிப்பாட்டை மட்டுமே நாம் அறிந்து கொண்டிருக்கிறோம்.

நித்தியத்தையும் அநித்தியத்தையும் ஒப்பிட்டு முடிவுக்கு வர – விவேகத்துடன் செயல்பட எவராலுமே முடியாது.

நமது எல்லைக்குட்பட்டது அநித்யம் மட்டுமே; – நாம் அனுபவித்துவரும் அனுபவங்கள் மட்டுமே.

நாம் நமது விவேகத்தை பயன்படுத்துவதாயின் அது இந்த அநித்ய வஸ்துவிடம் மட்டுமே சாத்தியம். அதைத்தான் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ள முடியும்.

தெரியக்கூடிய ஒன்றை மட்டுமே கூறியிருக்கலாமே? ஏன் பிறகு தெரிய முடியாத நித்யப் பொருளைப்பற்றி பேசுகிறார்கள்?

இதன் பின்னணியில் இருக்கும் நோக்கம் என்ன?

நாம் அறிக்கூடிய, உணரக்கூடிய அனைத்தும் தற்காலிகமானவை - முக்கியத்துவம் அற்றவை என்பதைத் தெரிந்து கொள்ளும் நோக்கத்தில் தான்

- நித்திய வஸ்துவைப் பற்றியும், பிரம்மத்தைப் பற்றியும், ஆன்மாவைப் பற்றியும் அவ்வளவு தூரம் கூறப்படுகிறது.

ஒரு சீடன் தனது குருவிடம் தியானங்கள் பலவற்றைக் கற்றுக் கொண்டான். ஆனாலும் அவனுக்கு நிறைவு கிடைக்கவில்லை.

நல்ல அனுபவங்கள் ஏற்பட்டு மறைந்துவிட்டன. அவன் குருவிடம் "அடுத்ததாக நான் என்ன செய்யவேண்டும்? நான் செய்ததையும்விட உயர்வகை தியானம் ஏதாவது உள்ளதா?" என்று கேட்டான்.

குரு, சீடனிடம் கூறினார்; "நீ இங்கிருந்து இரண்டாவது அறைக்குள்ளே போ. அங்கு விளக்கோ, வெளிச்சமோ இருக்காது. அது உனக்குத் தேவையில்லை. அந்த அறைக்குள் நுழைந்ததும் இடதுபக்க சுவரின் அருகே போ. அங்கு ஒரு பெரிய அலமாரி இருக்கும். அந்த அலமாரி முழுவதும் சிறிய பிளாஸ்டிக் டப்பாக்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். ஒரே ஒரு டப்பாவில் மட்டும் தங்க நாணயம் ஒன்றைப் போட்டு வைத்துள்ளேன். அதைக் கண்டுபிடித்துக் கொண்டுவா".

சீடன் அந்த அறைக்குள் நுழைந்து அலமாரியைக் கண்டுபிடித்தான். குரு கூறியதுபோல் அலமாரி முழுவதும் பிளாஸ்டிக் டப்பாக்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஒரு டப்பாவை எடுத்து குலுக்கிப் பார்த்தான். ஒரு நாணயம் உள்ளே கிடந்து குலுங்கியது. டப்பாவை எடுத்து திறந்து பார்த்தான். இருட்டாக இருந்ததால் எதுவும் தெரியவில்லை. தொட்டுப்பார்த்தால், அது நாணயந்தான் என்பது தெரிந்தது.

"சுவாமி! கண்டுபிடித்துவிட்டேன்! கொண்டு வரவா? - அங்கிருந்தே கேட்டான்.

"வேண்டாம்! அது தங்க நாணயம் இல்லை. மேலும் தேடு" - குரு வெளியே இருந்து கூறினார்.

சீடன் அடுத்த டப்பாவை எடுத்து குலுக்கிப் பார்த்தான். அதற்குள்ளும் நாணயம் ஒன்று இருந்து குலுங்கியது.

"இதுவும் தங்க நாணயம் இல்லை" என்று குரு கூறிவிட்டார்.

இப்படி அவன் பல டப்பாக்களைக் குலுக்கிக் காட்டி விட்டான். குரு அத்தனை டப்பாக்களையும் நிராகரித்துவிட்டார்.

அவனுக்கு குரு மீதே சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. 'இவர் நம்மை ஏமாற்றுகிறாரா? பிளாஸ்டிக் டப்பாவினுள் குலுங்குவதை வைத்து எப்படி இவரால் கூறமுடியும்? நமக்கு எல்லா சத்தமும் ஒன்றுபோல் தான் தோன்றுகிறது' - இப்படி அவன் எண்ண ஆரம்பித்தான்.

கடைசியில் அவன் குருவிடமே கேட்டுவிட்டான். "சுவாமி நீங்கள் சப்தத்தை வைத்து எவ்வாறு வித்தியாசம் கண்டுபிடிக்கிறீர்கள்? எதை வைத்து, குலுங்குவது தங்க நாணயம் இல்லை என்பதைக் கண்டுபிடிக்கிறீர்கள்? ஓசையில் வித்தியாசம் உள்ளதா?"

குரு அமைதியாகக் கூறினார்.

"குழந்தாய்! தங்க நாணயம் உள்ள டப்பா எனது மடியில் பத்திரமாக உள்ளது. அங்குள்ள நாணயங்கள் எவையுமே தங்கம் கிடையாது. அது எப்படி குலுங்கினால் எனக்கென்ன?"

நித்தியம், பிரம்மம், ஆன்மா, சத், மெய்ப்பொருள் என்ற பெயரில் நாம் எதைத் தேடினாலும் அது அநித்தியமே.

நாம் அறியக் கூடியவை, உணரக்கூடியவை அனைத்தும் அநித்தியமே.

பிரம்மத்தை - 'சத்'தை ஆதாரமாகக் கொண்டுதான் அனைத்து அனுபவங்களும் சாத்தியமாகின்றன; வெளிப்படுகின்றன.

வெளிப்பட்டவற்றை மட்டுந்தான் அறிய முடியுமே தவிர வெளிப்பாடுகளுக்குக் காரணமானதை அறியவே முடியாது, அது அறியப்படும் பொருளன்று.

'நான் இருக்கிறேன்' என்ற தன்னுணர்வாக இருந்தாலுங்கூட அதுவும் ஒரு வெளிப்பாடே

- தோன்றி மறையக் கூடியதே.

நித்ய - அநித்ய வஸ்து விவேகம் என்பது 'வெளிப்படாததையும் வெளிப்பட்டதையும் வித்தியாசப்படுத்தி அறிவதே".

நாம் எதை அறிந்தாலும் அது மெய்ப்பொருளாக இருப்பதற்குச் சாத்தியமே கிடையாது.

'நாம் அறிவது - உணர்வது - அனுபவிப்பது அனைத்தும் அநித்யமே'

- என்ற விவேகம் ஏற்படுவதால் எந்த அனுபவத்தையும் பற்றிப் பிடிப்பதோ துரத்தி அப்புறப்படுத்துவதோ

- தேவையில்லை என்பதைப் புரிந்து கொள்வதே

நித்ய அநித்ய வஸ்து விவேகமாகும்.

மரத்தின் நிழல் தரையில் விழுந்துள்ளது.

அதை வைத்துக் கொள்ளவோ அப்புறப்படுத்தவோ போராடுவதால் ஆவதென்ன? அனுபங்கள் அனைத்தையும் நிழலாகப் பார்ப்பதன் மூலம்

எல்லாவற்றையும் சமமாகப் பார்க்கும் சம திருஷ்டி நமக்கு ஏற்படுகிறது.

நித்ய - அநித்ய வஸ்து விவேகம் என்பது சமதிருஷ்டியையே குறிக்கிறது.

நமக்கு சமதிருஷ்டி ஏற்படும் பட்சத்தில்

நாம் நித்ய - அநித்ய வஸ்து விவேகத்தை அடைந்துவிட்டோமென்று பொருள்.

சமதிருஷ்டியின் நோக்கம்?

சமதிருஷ்டி ஏற்படும் போது நாம் நமது அனுபவங்களை எதிர்த்துப் போராடாத தன்மைக்கு வந்துவிடுகிறோம்.

அனுபவங்களை எதிர்த்து நாம் போராடாதபோது...?

அனுபவங்களை எதிர்த்துப் போராடுவது என்பது -

அனுபவமே தன்னை 'அனுபவம் - அனுபவிப்பவன்' என இரு துண்டுகளாக்கிப் போராடுவதே.

போராடாதபோது அனுபவத்தின் இரட்டைத் தன்மை மறைந்துவிடுகிறது.

அந்நிலையில் நமக்கு ஏற்படும் அனுபவங்கள் யாவும் ஒரு புனிதப் பிரவாகமாக அமைந்துவிடுகின்றன.

- தங்கு தடையற்றப் பிரவாகமாக அமைந்து விடுகின்றன. 

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

வாழ்க்கை என்ற பயணத்தில் நாம் அனைவரும் அதன் தூரம் அறியாத பயணிகள்தாம். இந்தப் பயணத்தில் நம் அனைவருக்குமே நமக்கென தனித்தனி கடமைகள் இருக்கின்றன. குடும்பம், உறவுகள், தொழில், சமுதாயம் என எல்லாவற்றுக்கும் நாம் ஆற்றவேண்டிய கடமைகள் பல இருக்கின்றன. காலப்போக்கில் நமது கடமைகளே நமக்கு சிறைகளாகவும் மாறிவிடுகின்றன. குழந்தைப் பருவத்தில் நமக்கு இருந்த மலர்ந்த முகம், கடமைகள் சிறைகளானதும், மறைந்து இறுகிவிடுகிறது. அறியாப் பருவத்தில் அனுபவித்த ஆனந்தம், அறிவு வளர்ச்சிக்குப் பிறகு இல்லாமல் போய்விடுகிறது. குழந்தையாக இருந்தபோது இருந்த விடுதலை பெரியவர்களானதும் விடுபட்டுப் போய்விடுகிறது.

இங்கு அறிவு ஆபத்தானது போலவும் விடுதலைக்கு எதிரானது போலவும் தோன்றுகிறது.

ஒரு குழந்தை ஆனந்தமாக இருந்தாலும் அதன் புறத்தேவைகள் அனைத்தும் அறிவுள்ள பெற்றோர்களாலேயே நிறைவேற்றப்படுகிறது. நாம் நம் அறிவு வளர்ச்சியின் காரணமாகவே நமது புறவாழ்வில் நல்ல முன்னேற்றம் அடைந்திருக்கின்றோம். நமது புற விஷயங்கள் அனைத்திற்கும் அறிவைக் கொண்டே தீர்வு பெறுகிறோம்.

பிறகு எங்கே பிரச்சினை ஆரம்பமாகிறது? குழந்தையாக இருந்தபோது இருந்த விடுதலை, இப்போது ஏன் எட்டாக் கனியாக இருக்கிறது?.

விடுதலை (முக்தி) என்பது, ஒவ்வொரு உயிரின் பிறப்பியல்பு. அதை நாம் முயற்சித்து, கொண்டுவரத் தேவையில்லை. குழந்தையாக இருக்கும்போது அது இயல்பாகவே இருக்கிறது. ஏனெனில் எந்தக் குழந்தையும் தன்னை சீரமைக்கப் போராடுவதில்லை. தன் உணர்வுகளோடும் முரண்படுவதில்லை; முரண்படவும் தெரியாது. நம் அறிவு வளர வளர புறத்தில் திறம்படச் செயல்படுகிறோம். புறப்பிரச்சினையை அறிவைக் கொண்டு சீரமைக்கின்றோம். இதில் ஒன்றும் தவறு இல்லை. பிறகு இதே அணுகுமுறையில் அகத்தை (மனதை) சீரமைக்கவும் முயற்சி செய்கிறோம். இந்த முயற்சிதான் நமக்கு அகப்போராட்டத்தைக் கொடுக்கின்றது. நமது விடுதலையைப் பறிக்கின்றது.

அறிவின் இயலாமையை, அறிவே புரிந்து கொள்வதுதான் ஞானம். அந்த ஞானத்தை அனைவருக்கும் கொண்டுசேர்த்து இனிய வாழ்வுக்கு பாதை வகுத்து கொடுக்கின்றது நமது பகவத் பாதை.

அகத்தில் குழந்தையாகவும் புறத்தில் அறிஞனாகவும் வாழ வகை செய்து கொடுக்கின்றது. பகவத் பாதையை ஒவ்வொரு இல்லத்திற்கும் சென்றடையச் செய்வது புரிந்தவர்களின் தொண்டாக இருக்கட்டும்.

மலர்ந்த முகத்துடன் ஆனந்தமாக தொண்டாற்றுவோம். நன்றி.

அன்புடன், **K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

## பழைமை விடு

ஞானியின் பின்னே அலைவது எதற்கு - நீரே
ஞானியாய் ஆகும் வழிகள் இருக்கு.
பாணிகள் மாற்றி பலகுரு மாற்றி - தினமும்
பரிதவித்திடுமோர் பரிதாபமெதற்கு?

தியானம் செய்ய சிலமணி ஒதுக்கி - உங்கள்
தினசரி வாழ்வில் மனதை அடக்கி
பயணம் செய்கையில் இடர்கள் வந்தால் - நீவிர்
படித்த தியானம் வழிக்குதவாது.

மனிதனின் இயல்பே பொங்கி எழுந்திடும் - உங்கள்
மனதை அடக்கும் முயற்சிகள் தோற்கும்.
குணத்தை மாற்றும் போராட்டத்தில் - உங்கள்
குறைகள் வளரும்; ஞானம் விலகும்.

குளத்தின் தண்ணீர் உங்கள் மனமே - அதுவே
சூழ்நிலை விளைவால் கலங்கிக் குழம்பும்.
உளத்தில் ஒன்றும் செய்யாதிருந்தால் - மெதுவே
உளமே தெளியும், கலக்கம் தீரும்.

உளத்தைத் திருத்த இறங்கி உழைத்தால் - உங்கள்
உழைப்பே கலக்கல் கூட்டிக் கொடுக்கும்.
உளத்தே எதுவும் செய்வதற்கில்லை - என்னும்
உண்மைப் புரிதலே ஞானம் ஆகும்.

இயல்பாய் தோன்றும் உணர்வுகள் யாவும் - நீரின்
இயல்பாய் ஓடி மறைந்தே போகும்.
உயர்வாய் மாற்றும் உங்கள் முயற்சியில் - அதுவே
உயிர் பெற்றெழுந்து ஊதிப்பெருக்கும்

அகத்தே எதுவும் செயலற்று இரு - புறத்தே
ஆழ்ந்த, உயர்ந்த செயலோடு இரு.
இகத்தே இப்பொழுதே ஞானம் பெறு - இனியும்
ஏங்கி அலையும் பழைமை விடு!

மரு. நா. கைலாசம்,
தலைவர்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.
செல் : 94432-90559

## ?கேள்வி பதில்

கேள்வி :நான் ஓர் ஆன்மிக அமைப்பில் பலருக்கும் உடற்பயிற்சி மற்றும் தியானப்பயிற்சி சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர் பொறுப்பில் இருக்கிறேன். உடற்பயிற்சி, தியானப்பயிற்சி மற்றும் சத்சங்கம் என எல்லாவற்றிலும் கலந்து கொண்டு வருகிறேன். உடற்பயிற்சியின் மூலம் என்னுடைய பழைய உடல் நிலையிலிருந்து நல்ல முன்னேற்றமடைந்து நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறேன். உடல் நிலையில் முன்னேற்றமடைந்த நான் மனதில் மட்டும் இன்னமும் அமைதியை அடைய முடியவில்லை. பகவத் ஐயாவின் புத்தகங்களைப் படித்து வருகிறேன். மனதைப் பற்றிய பல விசயங்கள் புரியவருகிறது. ஆனால் மன அமைதிக்கு நான் செய்து கொண்டு இருக்கும் தியானப் பயிற்சியை நிறுத்தினால், இருக்கும் நிலையிலிருந்து கீழான நிலைக்கு வந்துவிடுவோமோ என்ற பயம் ஏற்படுகிறது. மேலும் இவ்வளவு நாட்கள் செய்து வந்த தியானப் பயிற்சியிலிருந்து விடுபடுவது குற்ற உணர்ச்சியை ஏற்படுத்துகிறது. நான் மேற்கண்ட சூழ்நிலைகளை எவ்வாறு எதிர்கொள்வது?

பதில் : திறந்த மனதுடன் உங்களுடைய உண்மையான மனநிலையை இந்தக் கேள்வி மூலம் கேட்டமைக்கு மிக்க நன்றி.

ஒரு ஊரில் புத்தர் ஞானத்தைப் பற்றி பேசும் போது அங்கே குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுபவர்கள், அவரிடம் 'உங்களைப் போன்று கடுமையான பயிற்சிகளை எங்களால் செய்யமுடியாது. எங்களுக்கு குடும்பம், தொழில் என பலப் பிரச்சினைகள் உள்ளன. நாங்கள் ஞானத்தை விளங்கிகொள்ள ஏதாவது எளிமையான வழிமுறைகள் சொன்னால் உதவியாக இருக்கும்' என கூறினார்கள்.

அதற்கு புத்தர், "உடல் அசைந்தால் உறுதிபெறும்; மனம் அசையாமல் இருந்தால் அமைதி பெறும்" எனக் கூறினார்.

உடல் என்பதை நாமும், மற்றவர்களும் கண்களால் காணமுடியும். ஆனால் மனம் என்பதை அவரவர்கள் தான் உணர முடியுமே தவிர மற்றவர்களால் உணர முடியாது. நாம் எந்த ஆன்மிக அமைப்பில் இருப்பதிலும் தவறு கிடையாது. அவைகள் நம்முடைய முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப்பட்டவை.

எல்லா ஆன்மிக அமைப்பிலும் உடலுக்கும் பயிற்சி கொடுக்கப்படுகிறது, மனதிற்கும் பயிற்சி கொடுக்கப்படுகிறது. நாம் உடலுக்கான பயிற்சிகளை முறையாக கற்றுக்கொண்டு செய்வதன் மூலம் உடலை உறுதிப்படுத்திக்கொள்கிறோம். உடலிலிருக்கும் நோய் தொந்தரவுகளிலிருந்து விடுபட்டு நம் உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் அடைகிறோம்.

நாம் மனதிற்கான பயிற்சிகளை எடுத்துக்கொள்ளும் போது ஆரம்ப நிலையிலேயே நாம் இதுவரை கண்டு உணராத புதிய, புதிய அனுபவங்கள் ஏற்படுகின்றன. உற்சாக உணர்வு, பதட்டம் இல்லாத மனநிலை, எளிதில் கோபம் ஏற்படாமை, எந்த சூழ்நிலையிலும் மனம் அமைதியாக இருக்கும் தன்மை என நாம் எதிர்பார்க்கும் பல அனுபவங்கள் முதலில் ஏற்படுகின்றன. நாட்கள் செல்லச் செல்ல நமக்கு ஏற்பட்ட புதிய அனுபவம், உற்சாக உணர்வு, மன அமைதித் தன்மை, கோபப்படாமை என அனைத்தும் குறையத் தொடங்குகின்றன. நாம் என்ன முடிவுக்கு வருகிறோம்? உடலுக்கு முறையாக பயிற்சி கொடுத்து உடல் நல்ல உறுதியும், முன்னேற்றமும் அடைந்ததுபோல் மனதிற்கு தீவிரமாகப் பயிற்சி கொடுத்து எப்போதும் மனம் நம் கட்டுபாட்டிலே இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். ஆனால் மனதிற்குக் கொடுக்கப்படும் பயிற்சிகள் அனைத்தும் ஞானத்திற்கான நுழைவாயிலாகவும், நல்ல அடித்தளமாகவும் இருக்குமே தவிர, அதுவே முடிவான நிலை கிடையாது. அதையும் கடந்து புரிந்துகொண்டு செயல்பட வேண்டிய பகுதியும் உள்ளது.

காலம் காலமாக மனப்பயிற்சிகளை மேற்கொண்டு, வாழ்க்கை முழுவதும் பயிற்சி செய்வதிலேயே கழிந்துவிடுகிறது. எப்போதுதான் கற்றுக்கொண்ட பயிற்சிகளைக் கொண்டு நாம் மனம் விரும்பியபடி நிறைவாக வாழ்வது? ஒரு பயிற்சி என்றால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் கற்றுக்கொண்டு, பயிற்சி செய்து பிறகு, அதை நம்முடைய நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படுத்தி, நாம் வாழ்வில் வெற்றி அடைய வேண்டும். அதுதான் பயிற்சி. ஆனால் மன அமைதிக்கான இந்தப் பயிற்சி காலம் முழுவதும் பயிற்சி செய்தாலும் முழுமை அடைந்தபாடில்லை. இதுதான் இன்றைய எல்லா ஆன்மிக அமைப்புகளின் மனப்பயிற்சியின் உண்மை நிலை,

பிறகு எப்படித்தான் மன அமைதியை அடைவது?

மனதைப் பயன்படுத்தி மனதை சரிசெய்யமுடியாது என்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

மனதைப் பயன்படுத்தி நாம் எதைச் செய்யமுடியும், எதைச் செய்யமுடியாது எனப்புரிந்து கொண்டு செயல்படுவது தான் ஞானம்.

மனதைப் பயன்படுத்தி எதையெல்லாம் செய்யமுடியாது என்பதை முதலில் தெரிந்துகொள்வோம். மனதில் தாமாக தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் மனதைப் பயன்படுத்தி எப்போதும் சரிசெய்யவோ, நிறுத்தவோ, மாற்றி அமைக்கவோ முடியவே முடியாது. மேலும் அவைகள் தோன்றிய பிறகே நம்மால் அடையாளம் காணப்படுகின்றன. இது போன்று தான் மனதில் தாமாகத் தோன்றும் எல்லா விதமான எண்ணங்களும், உணர்வுகளும். இதற்கு நாம் பொறுப்பு எடுத்துக்கொள்ளத் தேவையில்லை. அதாவது நாம் வீட்டில் நாற்காலியில் அமர்ந்து பேப்பர் படித்துக்கொண்டு இருக்கிறோம். யாரோ ஒருவர் நமது பக்கத்து வீட்டின் காலிங்பெல் (Calling Bell) ஐ அடிக்கிறார்கள். நாம் அதற்கு எந்த வகையிலும் பொறுப்பு எடுத்துக்கொள்ளமாட்டோம். அதுபோல் நமது மனதில் தாமாக தோன்றுபவைகளுக்கு நாம் எந்த வகையிலும் பொறுப்பு எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை.

மனதைப் பயன்படுத்தி எதைச் செய்யமுடியும் என்பதைத் தெரிந்துகொள்வோம். மனதில் தாமாக தோன்றிய எண்ணங்கள், உணர்வுகள் நமது புற வாழ்வின் வளர்ச்சிக்குத் தேவையான தூண்டுதலைக் கொடுக்கும் வகையில் இருந்தால், அதை நம்முடைய அறிவைப் பயன்படுத்தி புத்திசாலித்தனமான செயலுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம். அதாவது நாம் வீட்டில் பேப்பர் படித்துக் கொண்டு இருக்கிறோம். நம் வீட்டின் காலிங்பெல் (Calling Bell) ஐ யாரோ அடிக்கிறார்கள். நாம் வந்திருப்பவர் யார்? அவருக்கும் நமக்குமான தொடர்பு என்ன என ஆராய்ந்து நமது தேவைக்கு தகுந்தபடி அவருடன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வோம். ஓர் உதாரணம். நாம் இப்போதுதான் புதிதாக கார் ஓட்டக் கற்றுக்கொண்டு தனியாக

சாலையில் சென்றுகொண்டிருக்கிறோம் என வைத்துக்கொள்வோம். போக்குவரத்து மிகுந்த பகுதியில் செல்லும்போது எங்கேயாவது மோதிவிடுவோமா என்ற பய உணர்வு ஏற்படுகிறது. இப்போது நாம் என்ன செய்யவேண்டும்? பயத்தை போக்கும் முயற்சியை கைவிட்டுவிட்டு அதைத் தூண்டுகோலாக பயன்படுத்தி எச்சரிக்கையாகவும், நிதானமாகவும் கார் ஓட்டுவதில் கவனத்தைச் செலுத்தி செயல்படலாம். இதுபோல் அக உணர்வை புறச்செயலுக்கு தூண்டுகோலாக பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

அதுபோல் மனதில் தாமாக தோன்றும் எண்ணம், உணர்வு. அனுபவத்தை நம்முடைய புறவாழ்க்கையின் தேவைக்காகவும், வளர்ச்சிக்காகவும் இருக்கும் எனில் அதை நம்முடைய அறிவைக் கொண்டு பயன்படுத்திக் கொள்ளலாம். தேவையற்ற எண்ணம். உணர்வு, அனுபவம் எனில் பக்கத்து வீட்டு Calling Bell என முடித்துக்கொள்ள வேண்டும். அதைச் சீரமைக்க வேண்டிய அவசியம் இல்லை.

நமக்கு எப்படிப்பட்ட எண்ணம் ஏற்பட்டாலும், உணர்வு ஏற்பட்டாலும், அவைகளை சீரமைப்பதை அப்படியே விட்டுவிட்டு, நமது அறிவைப் பயன்படுத்தி சமுதாய ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து சரியான செயலை மட்டுமே செய்யவேண்டும். இப்படி நாம் தொடர்ந்து செயல்படும் போது, நமது செயல்கள் எல்லாம் நல்ல செயல்களாகவே அமையும். நல்ல செயல்கள் மட்டுமே செய்யும் போது, காலப்போக்கில் நமது இயல்பும் மாறி அமைந்து, நமக்கு ஏற்படும் கலக்கமான எண்ணமும், உணர்வும் குறையத் தொடங்கும். இப்படி மட்டுமே மன அமைதி ஏற்பட வாய்ப்பு உள்ளது.

எல்லாப் பயிற்சிகளும், முயற்சிகளும் உடல் நலனுக்காகவும், புறவாழ்வின் வளமான செயலுக்காகவும் இருப்பதில் எந்தத் தவறும் கிடையாது. அவைகளைப் பயன்படுத்தி மனதைச் சரி செய்ய முயல்வது மட்டுமே தவறு. தியானம் என்பது மன ஒருமைக்கான பயிற்சி ஆகும். நாம் செய்கிற செயலிலிருந்து மனம் கவனம் சிதறாமல், அந்தச் செயலிலேயே முழுமையாக இருப்பதற்கு தான் தியானப்பயிற்சி. தியானம் என்பது நாம் செய்யும் செயல் முழுமையான செயலாக அமைவதற்கு தான். இதை நீங்களும், உங்களைப் போன்று ஆன்மிக அமைப்பில் முக்கிய பொறுப்பில் இருக்கும் ஒவ்வொருவரும் நன்றாகப் புரிந்துகொண்டு தங்களுடைய ஆன்மிக அமைப்பில் இருந்துகொண்டே உங்களை நாடி வரும் ஆன்மிக அன்பர்களுக்கு இந்த மனதைப் பற்றிய புரிதலோடு, உடல் பயிற்சி மற்றும் தியானப் பயிற்சியையும் கற்றுக்கொடுத்து அவர்கள் வாழ்விலும் இந்த தெளிவு என்னும் தீபத்தை ஏற்றுங்கள். உங்களால் ஆன்மிக அமைப்புகளும், ஆன்மிக அன்பர்களும், சமுதாயமும் வளம் பெறட்டும்.

"மனதைப் பயன்படுத்தி மனதைச் சீரமைக்க முடியாது. மனதைப் பயன்படுத்தி நமது வாழ்க்கையின் வளர்ச்சிக்கு தேவையான செயலைச் செய்ய முடியும்."

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942-05880

கேள்வி : நான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் கருத்துக்களை புரிந்துகொள்ள முயன்று கொண்டிருக்கிறேன். அகத்தில் சும்மா இருக்குமாறு நீங்கள் கூறுகிறீர்கள். அதாவது மனதில் எந்த எண்ணம் வந்தாலும் அவற்றை தடுக்காது அப்படியே அனுமதிக்குமாறு சொல்கிறீர்கள். நீங்கள் கையில் எடுக்காத நிலையில் அந்த எண்ணங்களுக்கு ஆயுள் அரை நொடிதான் என்று சொல்கிறீர்கள். ஆனால் அந்த அரை நொடியில் அந்த எண்ணங்களை கையில் எடுக்காது இருக்க நான் விழிப்பு நிலையில் தானே இருந்தாக வேண்டும். விழிப்பு நிலையில் இல்லாமல் அப்படியே எல்லா எண்ணங்களையும் விட்டுவிட்டால் நான் எப்போதும் பல எண்ணங்களோடு மயக்க நிலையில் இருப்பதாய் தான் உணர்கிறேன். பல எண்ணங்கள் தோன்றிக் கொண்டே இருக்க, நான் அவற்றை அனுபவிப்பவனாய் சில நேரம் துக்கத்தோடும், சில நேரம் மகிழ்ச்சியோடும் சில நேரம் பயத்தோடும் என மாறிக்கொண்டே இருக்கிறேன். இதில் எனக்கு தெளிவு நிலை ஏற்பட்டது போல தெரியவில்லை. குழப்பத்தில் நீடிப்பது போல் தான் படுகிறது. இதிலிருந்து நாங்கள் தெளிவு பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறேன் நன்றி.

பதில் : சும்மா இருப்பது நமது செயலன்று. அது நம் முயற்சியால் வருவதுமன்று. மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் எதிர்த்து எதுவும் செய்யமுடியாது என்பதையும் அவை நம் கட்டுப்பாட்டில் இல்லை என்பதையும் மிகத் தெளிவாகப் புரிந்து கொள்வது மட்டுமே நமது வேலை.

அவற்றின் ஆயுள் அரை நொடியாக மட்டும் இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. அதுவாக எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். நம்மை அறியாமல் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இருக்கட்டும். விழிப்பு நிலையில் இருக்க வேண்டும் என்பதே போராட்டம்தான். நமக்குத் தெரிந்து நாமாக எதிர்த்துப் போராடாமல் இருந்தால் போதும். மேலும் இதைப் புரிந்து கொள்வதால் எந்த எண்ணமும் உணர்வுகளும் வரவே வராத நிலை ஏற்பட்டுவிடும் என்று பொருள் கொள்ள வேண்டாம். நமது இயல்புக்குத் தகுந்த அனைத்து உணர்வுகளும் எண்ணங்களும் வந்து செல்ல அனுமதிக்கும் நிலை, தானாக ஏற்பட்டுவிடும்.

இங்கு எண்ணங்களையும் உணர்வுகளையும் அனுபவிக்கும் அனுபவிப்பவன் கூட கிடையாது. அப்படி ஒன்று இருந்தால் அதுவும் அனுபவமே. உண்மையில் எண்ணங்கள் எண்ணங்களோடு முரண்படுவதில்லை; உணர்வுகள் உணர்வுகளோடு முரண்படுவதில்லை. இது சுய முரண்பாடற்ற நிலை. இதுவே பிரவாக நிலை; விடுதலையுற்ற நிலை.

அன்புடன், **K.S. ஜீவமணி,** சேலம்
செல் : 97891-65555

கடிதம்

உ

நமசிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!

நான் பல வருடங்களாக ஞானம் பெற பலவழிகளைப் பின்பற்றி கடைசியில் ஞானி பகவத் ஐயா அவர்களின் ஞானவிடுதலை என்ற நூலினைப் படித்து ஞானம் பெற்றேன். பிறகு தஞ்சாவூரில் உள்ள எல்லோரையும் ஞானிகளாக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் ஐயா அவர்களை தஞ்சைக்கு அழைத்துவந்து, சொற்பொழிவாற்ற வைத்தேன். வந்தவர்களின் சந்தேகங்களையும் போக்கி ஐயா அவர்கள் மனநிறைவு ஏற்படுத்தியுள்ளார்கள். நான்கு முறை தஞ்சாவூருக்கு ஐயாவை அழைத்து சொற்பொழிவு ஆற்ற வைத்துள்ளேன். சத்சங்கமும் நடத்தியுள்ளேன். ஞானி பகவத் ஐயா அவர்களின் ஞானவாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள் என்ற நூலினைப் படிக்க என்னையும் தேர்வு செய்து நூலினையும் அனுப்பி, கிடைக்கப்பெற்று படித்துமுடித்துவிட்டேன். ஒரே மூச்சில் படிக்கமுடியவில்லை. காரணம் நேரம் இல்லாமை. இந்த நூலினைப் படித்துமுடித்தவுடன் மீண்டும் ஒரு ஞானவிடுதலை கிடைத்ததுபோல் தோன்றுகிறது. மனநிறைவு, ஆக்கம், ஊக்கம், தெளிவு அதிகமாகிவிட்டது. 25 பாகங்களாகப் பிரித்துக் கொடுத்துள்ளார். ஒவ்வொரு பாகத்திலும், நகையை மெருகேற்றுவதுபோல் நம் மனதை மெருகேற்றுகிறார். 10-வது பாகத்தில் வரும் விஷயங்களில் சரணாகதி, எல்லாம் அவன் செயல் - இவை இரண்டுமே ஞானம் பெற உயர்ந்த வழி என்று தெள்ளத்தெளிவாகிவிட்டது. அந்த பாகத்தினை படிக்கும்போது எனக்கு நடந்த, நடந்துகொண்டிருக்கின்ற சம்பவங்களாகவே இருந்தது. மிகவும் ஆச்சரியப்பட்டுபோனேன். இதுபோல் உலக மக்கள் அனைவரும் ஞானி பகவத் ஐயா அவர்களின் சொற்பொழிவினைக் கேட்டும், நூல்களைப் படித்தும் ஞானி ஆகும்படி வேண்டி முடிக்கிறேன்.

குறிப்பு : இந்த நூலுக்காக தாங்கள் கொடுத்துள்ள விதிமுறைகள் மாறாது நடந்துகொள்கின்றேன். மற்றவர்களுக்குக் கொடுக்காமலும், பொது இடங்களில் வைக்காமலும் பாதுகாத்து வருகிறேன்.

வணக்கம். நன்றி.

அன்புடன், T.K. சதானந்தன், ரெய்கி மாஸ்டர் / டீச்சர்
88/342, கூட்டுறவு காலனி ஆறாவது தெரு,
தஞ்சாவூர் - 613 007.
செல் : 98947-26162, 90037-41221.

## பிரவாகம் பப்ளிகேசனின் புதிய வெளியீடு

**ஆத்ம ஞானி தேனி சுவாமிகளின் வரலாறும் - உபதேசமும்** (விலை ரூ. 70/-)

என்ற புதிய நூல் தேனிசுவாமிகளின் குருவான அருள்மிகு ஸ்ரீ சற்குரு சுவாமிகளின் பாடல்களோடு வெளியிடப்பட்டுள்ளது.

பகவத் ஐயா அவர்கள் தேனி சுவாமிகளைப் பற்றி ஓர் அறிமுக உரையும் வழங்கியிருக்கிறார்கள். இப்புதிய நூல் அனைவருக்கும் பயனுள்ளதாக இருக்கும். எனவே அனைவரும் வாங்கி பயன்பெற அழைக்கின்றோம்.

பிரவாகம் பப்ளிகேசன்ஸ்
31, ராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.
செல் : 99942-05880, 97891-65555

16-03-2013 அன்று சென்னை பெரம்பூர் அன்னாதன சமாஜத்தில் நடைபெற்ற “ஆன்மாவை துறந்து ஆன்மாவாக இரு” என்ற தலைப்பில் நடைபெற்ற சத் சங்கத்தில் எடுக்கப்பட்ட புகைப்படங்கள்








## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 30-6-13 ஞாயிறு | ஸ்ரீனிவாச சாஸ்த்திரி ஹால் 40, Luz Church Rd., மைலாப்பூர், சென்னை - 4 | **தன்னை அறியும் ஞானம்** மாலை 5-30 to 8-30 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், செல் : 98840 97438 99520 71525 |

## ஜென் கதை

### எல்லாம் நீயே

ஞான வேட்கை மிகுந்த ஒருவர், உண்மையான குருவைத் தேடி மெய்ஞ்ஞானம் பெற குதிரையில் ஏறி காடு, மேடாய் அலைந்தார்.

ஒரு மாத காலத்திற்குப் பிறகு, ஒரு மெய்ஞ்ஞான குருவை மலைக்குகை ஒன்றில் கண்டுபிடித்தார்.

வந்தவரின் ஆவலை குரு கேட்டறிந்தார்.

பிறகு நீண்ட நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார்.

வந்தவர் காத்திருந்தார்.

குரு கண் விழித்தார். பயணி ஏறி வந்த குதிரையை உற்று நோக்கினார்.

"குதிரையைத் தேடாமல், ஞானத்தைத் தேடி ஏன் வந்தாய்?" என்று கேட்டார்.

"என்னிடம் குதிரை இருக்கிறது சுவாமி!" என்றார் பயணி.

குரு லேசாகச் சிரித்தார்.

பிறகு, மீண்டும் "நீ ஏன் குதிரையைத் தேடி பிடிக்கக் கூடாது. மெய்ஞானம் அறிவது எதற்கு?" என்றார்.

அந்த மனிதருக்குக் கோபம் வந்தது.

"என்னிடம் குதிரை இருக்கிறது என்று சொன்னேனே! அப்புறம் ஏன் குதிரையைத் தேடவேண்டும்?" என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

குரு சிரித்தபடி சிறிது நேரம் மௌனமாக அமர்ந்திருந்தார்.

"மெய்ஞானம் தான் உன்னிடமே இருக்கிறதே! பிறகு ஏன் அதைத் தேடி அலைய வேண்டும்?" என்று அமைதியுடன் கேட்டார் குரு.

பிறகு, மெல்ல எழுந்து குகைக்குள் போய்விட்டார்.

அவ்வளவுதான்! அவருடைய ஞானோபதேசம் முடிந்து விட்டது!

"நீயே மெய்பொருளாக இருக்கையில், எதைத் தேடி அலைகிறாய்?" என்பது அவனுள் ஒலித்துக்கொண்டே இருந்தது.

தன்னையே மெய்பொருளாக உணர்வது மெய்ஞானம். அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருப்பது மெய்பொருளே.

"நீயும் அதுவே"



ஜென் கதை 'எல்லாம் நீயே'

**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

*To*

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.